வந்துவிட்டார்! திகம்பர சாமியார்

# மதன கல்யாணி

1









வடுவூர் கே. துரைசாமி ஐயங்கார்

# மதன கல்யாணி

பாகம் – 1

வடுவூர் K. துரைசாமி ஐயங்கார்



ஜெனரல் பப்ளிஷர்ஸ்
244, (ப. எண்.) ராமகிருஷ்ணா மடம் சாலை,
மயிலாப்பூர், சென்னை – 600 004.

உரிமை பதிவு
ஜெனரல் பப்ளிஷர்ஸ்
முதற் பதிப்பு - 2004



மொத்த பக்கங்கள் : (16+312) = 328

**விலை: ரூ. 125.00**

Laser Typeset by - **Print Point Graphics,** Chennai - 20.
Printed at - Jai Ganesh Offset Printers, Chennai - 600 004.

# பதிப்புரை

பரபரப்பு குறையாமல், அந்த பரபரப்புக்கு என்று நிகழ்ச்சிகளைத் தொடுக்காமல், ஆபாசமில்லாமல், ஏராளமான கதாபாத்திரங்களை உருவாக்கி, அபத்தங் களைக் கொட்டாமல், முதல் வரியிலிருந்து கடைசி வரி வரை விறுவிறுப்பைக் குறைக்காமல், நிகழ்ச்சி மேல் நிகழ்ச்சியாக உருவாக்கி, புத்திசாலித்தனமாக, சாதுர்யமாக கதாபாத்திரங்களைப் பேச விட்டு, சமு தாயத்தில் இருக்கும் ஒவ்வொரு மனிதனும் எப்படி எல்லாம் நடந்து கொள்ளக் கூடாது... போன்ற அற்புத மான தகவல்களைச் சொல்லும் நாவல்கள்தான் வடு வூர் துரைசாமி ஐயங்காரின் நாவல்கள். இவருடைய கதைகளில் காதல் காட்சியும் வரும், கோர்ட் சீனும் வரும், போலீஸ் நடவடிக்கைகளும் வரும், மருத்துவரின் சேவையும் வரும் — இப்படி அநேகமாக எல்லாத் தரப்பு மனிதர்களின் மேன்மையைப் பற்றியும் சொல் வார்.

அதே சமயத்தில், இதே சமுதாயத்தில் நல்லவர் கள் மத்தியில் வாழும் வக்ர புத்தி உள்ளவர்களைப் பற்றியும் சொல்லி, அப்படிப்பட்டவர்களை எப்படி எல்லாம் அடக்கி ஆளலாம் என்பதைப் பற்றியும் சொல்லியிருப்பார். இவருடைய எழுத்துக்களில் சிரிப் புக்குப் பஞ்சமிருக்காது. கதைகளில் நிலவும் கடின மான சூழ்நிலையையும், படு சாதாரணமாகக் கையாண் டிருப்பார். சிக்கலையும் உருவாக்கி, அந்த சிக்கலி லிருந்து விடுபடும் வழியையும் சொல்வார். வடுவூர் துரைசாமி ஐயங்கார் எழுதிய நாவல்களைப் படித் தால், பொழுது போவது மட்டுமன்றி, பல விஷயங் களைத் தெரிந்து கொள்ளலாம்.

தமிழில் நெடுங்கதை அல்லது நாவல் தோன்றிய ஆரம்ப கால கட்டத்தில் வடுவூர் துரைசாமி ஐயங்கார் இந்த நாவல்களை எழுதியுள்ளார். அந்த காலகட்டத்தில் இவருடைய நாவல்களைப் படிக்காதவர் எவரும் இருந்திருக்க முடியாது. மிகவும் பிரபலமாகப் பேசப்பட்ட 'திகம்பர சாமியார்' இவருடைய பாத்திரப் படைப்பு. திகம்பர சாமியாரின் அறிவு அளவிட முடியாதது. மிகவும் புத்திசாலியானவர். தன்னுடைய ஒவ்வொரு பேச்சு வார்த்தையிலும், செயலிலும் பல்லாயிரக்கணக்கான அர்த்தங்களை யூகிக்க வைப்பார். இவருடைய ஒவ்வொரு நாவலும், ஒன்றை ஒன்று மிஞ்சி நிற்கிறது.

'இவ்வளவு வருடங்கள் ஆகி விட்டதே! போர் அடிக்காதா?' என்று வாசகர்கள் துளிகூட எண்ண வேண்டாம். இதை நாங்கள் வியாபார நோக்கில் சொல்லவில்லை. உண்மையில் இந்த நாவல்களை எல்லாம் நாங்கள் படித்துப் பார்த்த பிறகுதான் வெளியிடுகிறோம். நேரம் போவதே தெரியாமல் சரளமான தமிழ் நடையில், கதை போகும் போக்கே மிக மிக நன்றாக உள்ளது.

வடுவூர் துரைசாமி ஐயங்கார் இப்படிப்பட்ட நாவல்களை எழுதியதால் ஏராளமான நற்சாட்சிப் பத்திரங்களையும், தங்க மெடல்களையும் பெற்று உள்ளார். இதெல்லாம் சாதாரண விஷயமல்ல. இந்த நாவல்களைத் தமிழ் மக்கள் படிக்க வேண்டும், போற்ற வேண்டும், நாங்களும் நிறைய புத்தகங்களை விற்க வேண்டும். இதெல்லாம் வாசகர்களுக்குத் தெரியாமலா இருக்கும்? இந்தப் புத்தகங்களை வாங்கும் அனைவருமே புத்திசாலிகள்தான்.

இந்த நாவல்களை வெளியிடும் முயற்சியில் எங்களுக்கு மிகவும் உதவியாக எங்களது நீண்ட நாள்

நண்பரான, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் தலைவரான திரு. இரா. முத்துக்குமாரசாமிக்கும், நூலின் பழைய பிரதிகளைக் கொடுத்து உதவிய *(காஞ்சி புரம்)* அன்பர்களுக்கும், மேலும் இந்த நூல்களை, அந்தக் காலத்திலேயே ஏராளமாக விற்பனை செய்து, பெரும் பணியாற்றி தற்போது எங்களுக்கு உரிமையை வழங்கிய இரத்தின நாயக்கர் அண்டு சன்ஸ் உரிமை யாளர் திரு. பாலகிருஷ்ணன் அவர்களுக்கும் வாசகர் கள் சார்பில் எங்களது மனமார்ந்த நன்றியைத் தெரி வித்துக் கொள்கிறோம்.

'வடுவூர் துரைசாமி ஐயங்கார் நூல்கள் மீண்டும் வருமா? மீண்டும் வருமா?' என்று ஏங்கிக் கொண் டிருக்கும் வாசகர்கள் இப்போது மகிழ்ச்சி அடை வார்கள். இந்த நூல்களை 'புரூப்' பார்த்துக் கொண் டிருக்கும்போதே, பல வாசகர்கள், 'புரூப்' படிக்க வில்லை என்றால்கூடப் பரவாயில்லை, தாமதப்படுத் தாமல் உடனே வெளியிடுங்கள் என்று கூறினார்கள்.

அன்று 007
இன்று ஜேம்ஸ்பாண்டு - ஆனால்
அன்றும் இன்றும் என்றும்
"திகம்பர சாமியார்"

அல்லயன்ஸ் ஸ்ரீநிவாஸன்

# வடுவூர் கே. துரைசாமி ஐயங்கார்

**வடுவூர் துரைசாமி ஐயங்கார்:** *1880-1942.* தஞ்சை மாவட்ட மன்னார்குடி வட்டம். தந்தை கிருஷ்ண ஐயங்கார். பி.ஏ. பட்டம் பெற்று தாசில்தாராக விளங்கி, எழுத்துச் செல்வாக்கால் வேலையை விட்ட வர். தம் நாவல்களைத் தாமே அச்சிட ஓர் அச்சகமும் 'மனோரஞ்சனி' என்ற மாத இதழும் தொடங்கி மாதம் ஒரு கதை நூல் என எழுதிக் குவித்தவர். கலைமகள் கம்பெனி, விற்பனை நிலையமாகும்.

நடுத்தர உயரம், ஒல்லியான உடல், கருத்த மேனி, கழுத்து வரை பொத்தான் போட்ட கோட்டு, அங்க வஸ்திரம், பஞ்சகச்சம், தலையில், குல்லா, காலில் கட் ஷு, கையில் தடி, நெற்றியில் எப்போதும் திரு மண், வாய் நிறைய வெற்றிலை *(பெரிய வாய்)*, புகை யிலை, தினமும் தங்க பஸ்பம் சாப்பிடுவார் இளமை யோடிருக்க. மொத்தத்தில் கை நிறைய சம்பாதித்த கவலை இல்லாத உல்லாச மனிதர். இவர் மாடிக்கு ஜே.ஆர். ரங்கராஜு, ஆரணியார், பம்மல் சம்பந்த முதலியார், வை.மு.கோ., எஸ்.எஸ். வாசன் வந்து போவர்.

மனைவி நாமகிரி அம்மாள். மக்கள் விஜயராக வன், ரங்கநாயகி, கிருஷ்ணசாமி. மூத்த மகன் மனைவி புஷ்பவல்லி; புதுப்பேட்டை கார்ப்பரேஷன் பள்ளி ஆசிரியையாக இருந்து ஓய்வு; ஒரு பெண்ணும் பிள்ளையும் ரங்கநாயகிக்கு நான்கு மகள்களும், ஒரு பிள்ளை ரகுவும் நேவியில் காப்டன், வடுவூராரின் நவீனம் 'மைனர் ராஜாமணி' சினிமாவாக வந்து திரை யிட்டதும் ஒரு சமூகத்தை இழிவு செய்வதாக வழக்கு

தொடர்ந்து நிறுத்தப்பட்டது. இந்த அதிர்ச்சி, அவமானம் தாங்காது குருதிக் கொதிப்பால் மாண்டார்!

இந்த நூற்றாண்டின் தொடக்க 30 ஆண்டுகளில் தொடர்ந்து பல்லாயிரக்கணக்கான மக்களைத் தம் துப்பறியும் கதைகளால் பிணித்தவர். புத்தகம் படிக்கும் பழக்கத்தை ஏற்படுத்தி, பரந்த ஓர் வாசக உலகினைப் படைத்துக் கொண்ட பெருமையர் Reynolds போன்ற நாவலாசிரியர்களைத் தழுவி எழுதியதோடு, சொந்தமாகவும் படைத்துள்ளார். இவர் படைப்பில் சிறந்ததாக மேனகா, கும்பகோணம் வக்கீல் குறிப்பிடத்தக்கன; படமாகவும் வந்தவை. வாசகர்களின் நாடித் துடிப்பறிந்து ஈர்க்கும் இனிய வசனமும் அழகு வருணனைகளும் அனைவரையும் அள்ளின.

திகைப்பூட்டும் திருப்பங்கள், சுவைமிகு நிகழ்ச்சிகள், ஆவலைத் தூண்டும் விறுவிறுப்பும், படிக்கப் படிக்க மகிழ்வூட்டும் நடையும், நகைச்சுவை நெளிய நல்ல நல்ல நவீனங்களைப் படைத்துள்ளார்.

வெறும் மர்ம நாவல் என ஒதுக்க முடியாத அளவுக்கு வைணவத் தலங்களையும், வேற்று மதத்தினரும் கூடி வாழும் வகையும், சமூகக் குறை நீக்கமும் கொண்டும் விளங்குகின்றன. திகம்பர சாமியார் துப்பறியும் பாத்திரம் நினைவில் நிற்கும். நாவல் வரலாற்றில் சுவடு பதித்தவர் வடுவூரார் என்பதை யாரும் மறக்கவோ, மறுக்கவோ முடியாது.

— நன்றி - தமிழ் இலக்கிய வரலாறு

(மது.ச. விமலானந்தம்)

# இலக்கிய சாதனையாளர்

முப்பதுகளிலும் நாற்பதுகளிலும் கல்கி என்கிற எழுத்தாளர் தமிழ் வாசகர்கள் எண்ணிக்கையை அதி கரிக்க ஆவன செய்ததுபோல இருபதுகளில் தமிழ் வாச கர்கள் பரம்பரையை உருவாக்க முயன்றவர்கள் என்று ஜே.ஆர். ரங்கராஜு என்பவரையும் வடுவூர் துரைசாமி ஐயங்கார் என்பவரையும் சொல்ல வேண்டும்.

இந்த விஷயத்தைக் கல்கி தெரிந்து செய்தார் என் றும், முன்னிருவரும் தாங்களும் அறியாமலே வாசகர் பெருக்கத்துக்குக் காரணமாக இருந்தார்கள் என்றும் சொல்ல வேண்டும்.

ஜே.அர். ரங்கராஜுவின் ஐந்தாறு நாவல்களும் இரண்டு ஆண்டுகளுக்கு ஒன்றாக 1916 முதல் 1923 வரை யில் வெளிவந்தன. பிரஸ் சொந்தக்காரரான ரங்கராஜு பத்தாயிரம் பிரதிகளை அச்சிட்டு ஒவ்வொரு ஐநூறு பிரதி களையும் ஒரு பதிப்பாகக் குறிப்பிட்டு 10 பதிப்புகள் வரை தன் நாவல்களை வெளியிட்டார். ராஜாம்பாள், ராஜேந்திரன், சந்திரகாந்தா, ஆனந்தகிருஷ்ணன் என்று ஒவ்வொரு நாவலும் வெளியாகும்போது மிகவும் பர பரப்பாக வாசகர்கள் வாங்கிப் படித்தனர். வரதராஜன் என்று இரண்டு பாகங்கள் வெளிவரும் வரையில் ஒன்றும் தடங்கல் இல்லை. 'வரதராஜனின் பல பகுதிகள் இலக் கியத் திருட்டு' என்று கேஸ் போட்டு, மேலே எதுவும் எழுதிப் பிரசுரிக்கக் கூடாது என்றும், ஆறு மாதம் ஜெயில் வாசம் அல்லது ஆயிரம் ரூபாய் அபராதம் என் றும் கோர்ட் அவருக்குத் தண்டனை விதித்தது என்று எண்ணுகிறேன். ஜெயிலில் இருந்து விட்டு எழுதுவதை நிறுத்தி விட்டார் ரங்கராஜு. இவரை எழுத்தாளர் சங்கம் ஒன்று 40களின் ஆரம்பத்தில் கல்கி தலைமையில் ஏற்பட்ட போது முதல் கூட்டத்துக்கு வரவழைத்து நான் சந்தித்

திருக்கிறேன். தாடி வளர்த்துக் கொண்டு நாமம் போட்டுக் கொண்டு *(வைஷ்ணவ நாயுடு அவர் என்று எண்ணுகிறேன்)* பார்ப்பதற்குக் கம்பீரமாக இருந்தார்.

ரங்கராஜுவுக்கு அடுத்து வாசகர்களின் கவனத்தை அதிகமாகக் கவர்ந்தவர் என்று வடுவூர் துரைசாமி ஐயங்கார் என்பவரைச் சொல்ல வேண்டும். 1923, 24 முதல் 27 வரையில் தஞ்சையில் கல்யாண சுந்தரம் ஹைஸ்கூலில் நான் படித்துக் கொண்டிருக்கும்போது பச்சை, மஞ்சள், சிவப்பு அட்டையில் டெமி சைஸில் அவர்கள் நாவல்கள் ஒவ்வொன்றாக அப்பாவுக்குத் தெரியாமல் ரெயில்வே ஸ்டேஷன் ஹிக்கின்பாதம்ஸில் வாங்கிப் படித்த நினைவிருக்கிறது. படித்துவிட்டு வீட்டுக்கு எடுத்துப் போனால் அப்பா சண்டை பிடிப்பாரென்று அப்போது மேல வீதியில் தெற்குக் கோடியில் இருந்த ஒரு லைப்ரரிக்கு இனாமாகப் புஸ்தகத்தைக் கொடுத்து விடுவேன். இப்படிப் படித்த நாவல்கள் என்று கனகாம்புஜம் அல்லது கள்வனும் விலைமகளும், வஸந்த கோகிலம், பூரண சந்திரோதயம், விலாஸவதி, திகம்பர சாமியார், மேனகா இவை நினைவுக்கு வருகின்றன. ஒரு நாவல் கலைப் பிரக்ஞையுடன், சுலபமாகப் படிக்கக் கூடிய நடையுடன், விரஸமான விஷயங்களையும்கூட அதிக விரஸம் தட்டாமல் எழுதுவதில் சிரத்தையுடன் எழுதிய வடுவூரார் உண்மையிலேயே இலக்கியப் பிரக்ஞை உடையவர் என்பதில் சந்தேகத்துக்கிடமேயில்லை.

ரெயினால்ட்ஸின் மட்டமான நாவல்களைத் தழுவி எழுதினார் பெரும்பாலும் என்றாலும் அவர் விக்டர் ஹ்யூகோவின் Les Miserables என்கிற நாவலை அற்புதமாகத் தமிழில் தழுவி எழுதியிருக்கிறார். முதநூலைப் போலவே கனகாம்புஜம் அல்லது கள்வனும் விலைமகளும் என்கிற நாவல் அமைந்திருப்பதாகச் சொன்னால் அதில் தவறவில்லை.

அதே போல கிரேக்க புராணக் கதையான Eros and Psyche கதையை வஸந்த கோகிலம் என்கிற நாவலாகச் செய்திருக்கிறார்.

இன்று தமிழில் சரித்திர நாவல்கள் ஏராளமாக எழுதப்படுகின்றன. அவற்றுக்கெல்லாம் முன்னோடி யாகக் கல்கியைக் கருதுவது வழக்கமாக இருக்கிறது. ஆனால், இதே அளவில் இன்று எழுதப்படுகிற சரித்திர நாவலாசிரியர்களுக்கு முன்னோடியாக 1924-ல் வெளி வந்த வடுவூராரின் விலாஸவதி என்பதைத்தான் சொல்ல முடியும். அது வெளிவந்த சமயத்தில் மிகவும் பரவ லாகப் பேசப்பட்டதுடன் படிக்கவும் பட்டது. மூன்று ஆண்டுகளில் ஐந்து பதிப்புகள் வந்ததாக ஒரு தகவல் படித்திருக்கிறேன்.

வடுவூராரின் ஆரம்பக் காலத்திய நாவல்கள் எல் லாம் மாதாந்திரப் பத்திரிகையாக வெளிவந்த மனோரஞ் சிதம் *(அல்லது மனோரஞ்சனியா?)* என்கிற பத்திரிகை யில் வெளிவந்ததாகச் சொல்வார்கள். இந்தப் பத்திரி கையைப் பார்த்திருப்பதாக எனக்கு நினைவில்லை. அந்தப் பத்திரிகையை முன்மாதிரியாகக் கொண்டுதான் வை.மு. கோதைநாயகி அம்மாள் தனது ஜகன்மோகினி நாவல் பத்திரிகையைத் தொடங்கியதாகவும் சொல்வார்கள்.

இன்னொரு விஷயமும் அப்போது பரவலாகப் பேசபட்ட விஷயம் நினைவுக்கு வருகிறது. வை.மு. கோதைநாயகியின் முதல் நாவலான வைதேகியின் முதல் பாதியை வடுவூரார் எழுதி, முன்மாதிரியாகத் தந்த தாகவும் அதைப் பின்பற்றி முடித்து விட்டு வெற்றிகர மாக வை.மு.கோ. துப்பறியும் நாவல்களிலிருந்து அவர் தனி பிராண்டான சமூக நாவல்களுக்கு நகர்ந்தார் என்றும் சொல்லுவார்கள்.

1930-ல் என்று எண்ணுகிறேன். பைகிராப்ட்ஸ் ரோடு கோடியில் மரினா பஸ் ஸ்டாண்டிற்கு எதிரே

வேங்கடரங்கம் பிள்ளை தெரு பைகிராப்ட்ஸ் ரோடைச் சந்திக்கிற இடத்தில் இருந்த வீட்டை வாங்கி வடுவூரார் புதுப்பித்து வடுவூர் ஹவுஸ் என்று பெயரிட்டு கிரஹப் பிரவேசம் நடத்தியபோது, மாலையில் பாண்ட் வாசித்துக் கொண்டிருக்கும்போது நான் சென்னையில் இருந்தேன். வீட்டைப் பார்த்து வைத்துக் கொண்டு ஒரு வாரம் கழித்து, அவரைப் பார்க்கப் போனேன். அந்த ஒரு தடவை மட்டுமே அவரை நான் சந்தித்திருக்கிறேன்.

என்ன பேசினோம் என்று நினைவில்லை. ஆனால், பேச்சு பூராவும் தன் பக்கத்தில் அவர் நாவல்களைப் பற்றி யும், அவருடைய தழுவல் முறைகளைப் பற்றியும் அவர் நடையைப் பற்றிய வரையிலும்தான் என்று நான் நினைவு கூர்கிறேன். தன் நாவல்களில் பெரும் பகுதி தழுவல்கள்தான் என்று அவர் ஏற்றுக் கொண்டார். ஆனால், மேனகாவும் திலோத்தமை என்று ஒரு ஐந்து அங்க நாடகமும் தன் சொந்த எழுத்து என்று சொல்லி எனக்கு திலோத்தமா ஒரு பிரதி அன்பளிப்பாக அளித் தார். அதை வெகுநாள் நான் பத்திரப்படுத்தி வைத்திருந் தேன்.

அதைத் தவிர அவர் பேசிய விஷயங்களிலே முக்கியமானதாக ஒன்று நினைவுக்கு வருகிறது. எகிப் தில் தலைமுறை தலைமுறையாக ஃபாரோக்கள் என்கிற பெயருடன் அரசாண்ட மன்னர்கள் தென்னாட்டிலிருந்து எகிப்து என்கிற மிசிர தேசத்துக்குச் சென்ற வடகலை அய்யங்கார்கள்தான் என்று அசைக்க முடியாத ருசு இருப்பதாகவும், அதையெல்லாம் சொல்லித் தான் ஒரு நூல் எழுதிக் கொண்டிருப்பதாகவும் சொன்னார். இந்தச் சரித்திர உண்மையில் இருந்த அவருடைய அசைக்க முடியாத நம்பிக்கையின் காரணமாக ஆங்கிலத்தில் Long Missing Links என்று ஒரு 900 பக்க நூல் எழுதி அதைத் தன் சொந்தச் செலவிலேயே அச்சிட்டு விற்க முயன்றார். புஸ்தகம் விற்கவில்லை. அச்சுக்கும், பேப்பருக்கும் ஆன

கடனை புதுசாக வாங்கிய வீட்டை விற்று அடைத்து விட்டு, பேசாமல் கிராமத்துக்குப் போய்விட்டார் என்று எண்ணுகிறேன். இந்தப் புஸ்தகமும் என்னிடம் வெகு நாள் இருந்தது.

'காங்கிரஸ் கமலம்' அல்லது 'ஆணென்று அணைய அகப்பட்ட பெண் புதையல்' என்கிற நாவலை சுதேச மித்திரனில் தொடராக எழுதி வெளியிட்டார். இதுதான் பழைய வடுவூர் பாணியில் அவர் கடைசி முயற்சி என்று எண்ணுகிறேன். அதற்குப் பிறகு அவர் முப்பதுகளில் பழைய வேகத்தையோ சாதனையையோ எட்டவில்லை. மாசத்துக்கு ஒரு நாவல் என்று எழுதி, நாவலுக்கு நூறு ரூபாய் என்று கூலி வாங்கிக் கொண்டு ஏழெட்டு ஆண்டு கள் இருந்து பிறகு இறந்து விட்டார் என்று எண்ணு கிறேன்.

சேலம் பட்டுக் கரை வேஷ்டியும், காதில் டால் வீசும் வைரக் கடுக்கனும், நெற்றியில் ஒரு சிவப்பு ஸ்ரீ சூர்ணக் கோடுமாகவும் நான் பார்த்த வடுவூர் துரைசாமி ஐயங்காரை என்னால் இன்றுகூட நினைவுகூர முடிகிறது. தமிழுக்கு அவர் சேவை சரியானபடி கணிக்கப்பட வில்லை; புரிந்து கொள்ளப்படவில்லை என்றுதான் சொல்ல வேண்டும்.

— நன்றி - இலக்கியச் சாதனையாளர்கள் - க.நா.சு.

# தமிழ் நாவலின் தோற்றமும் வளர்ச்சியும்

ஆரணி குப்புசாமி முதலியாரைத் தொடர்ந்து அவர் பாணியில் தழுவல்களாக எழுதியவர் வடுவூர் துரைசாமி ஐயங்கார். தழுவல் நாவல்களாயிருந்தபோதிலும் தமிழ்நாட்டு இடப் பெயர், மக்கள் பெயர்களை வைத்தே ஜனரஞ்சகமாக எழுதப்பட்டதால், இவரது நாவல்கள்தான் தமிழ்நாட்டில் ஒரு பரந்த வாசகர் உலகத்தைச் சிருஷ்டித்து வைத்தன. புத்தகம் படிக்கும் பழக்கம் இந்த நாவல்களால் ஏற்பட்டது ஒரு புற மிருக்க, கண்டமேனிக்கு கதை எழுதும் எழுத்தாளர்களை உற் பத்தி செய்யக் காரணமாய் இருந்ததும் வடுவூரார் நாவல்கள் தான். ஆக, அக்காலச் சூழ்நிலையை ஒரு விமர்சகர் பின்வரு மாறு எடுத்துக் காட்டுகிறார்:

'அச்சுப் பொறி மலிந்து காகித வர்த்தகம் பெருகி வரும் இக்காலத்தில் நாவல்களும் புற்றீசல்போல் தோன்றித் தொடங்கி விட்டன. மக்களின் ஆசாரங்கள் சீர் பெறவும், பாஷை வளர்ச்சி யுறவும் நாவல்கள் பெரிதும் உதவி புரியும் என்பது உண் மையே. ஆனால், தடியெடுத்தோரெல்லாம் வேட்டைக்காரர் என்றபடி தமிழ் உலகத்திலே இறகோட்டிகளெல்லாம் நாவ லாசிரியர்களாய் முன்வந்திருப்பதால் தற்கால நாவல்கள் பெரும்பாலானவற்றால் விளையும் தீமைகள் அற்ப சொற்ப மன்று. 'ர'கர 'ற'கரங்களைச் சரியாய் வழங்க அறியாதவர் களும் தமிழ் எழுத்தாளராகத் துணிவு கொள்வதும் தமிழ் மொழியின் சனி திசையென்றே கூற வேண்டும். ஒன்றோ இரண்டோ விட புருஷர்கள், இரண்டோ மூன்றோ நாண மற்ற கன்னியர்கள், ஒரு துப்பறியும் கோவிந்தன் அல்லது கோபாலன், ஒரு ஆகாவழி ஜமீந்தார் — தமிழ் நாவல் பூர்த்தி யாகி விடுகிறது. தற்காலத்தில் துப்பறியும் நாவல்களெல் லாம் பிற நாட்டுப் பழக்க வழக்கங்களையும் மனோபாவங் களையும் தமிழகத்தில் பரப்பித் தமிழ் மக்களை அனாசாரப் படுகுழியில் தலைகீழாக வீழ்த்துகின்றன. நாவல்களின் தன்மை இன்னதென்றறியாத தமிழ் மக்களும் இந்த நாவல் புற்றீசல்களைக் கோழி விழுங்குவதுபோல் விழுங்கித் திருப்தி அடைகின்றனர் *(லக்ஷ்மி, செப். 1924, முத்து மீனாட்சி நாவ லுக்கு மதிப்புரையில்).*

வடுவூர் துரைசாமி ஐயங்கார் ரெயினால்ட்ஸ் போன்ற ஆங்கில நாவலாசிரியர்களின் கதைகளைத் தழுவி எழுதிய தோடு நின்று விடாமல் தமிழ்நாட்டின் சமகால சமு தாயத்தைச் சித்திரிக்கும் சொந்த நாவல்கள் பலவற்றையும் எழுதியிருக்கிறார். இவருடைய சொந்த முயற்சிகளில் சிறந் தவை மேனகா, கும்பகோணம் வக்கீல் என்பவையாகும். கையில் எடுத்தால் புத்தகத்தைக் கீழே வைக்காமல் தொடர்ந்து படிக்கும் ரசனை மிகுந்த கதைகளை எழுதிய வடுவூர் துரை சாமி ஐயங்கார் பின்னர் கல்கி போன்றவர்களின் கதைகளைப் படிக்கத் தயாரான ஆயிக்கரணக்கான வாசகர்களைத் தோற்று வித்த முன்னோடியாகவே விளங்கினார். இந்தப் பெருமையை ஆரணி குப்புசாமி முதலியாரும், ரங்கராஜுவும் பகிர்ந்து கொண்டனர்.

துரைசாமி ஐயங்காரின் மிகப் பிரசித்தமான மேனகா என்ற நாவலின் முதல் பக்கத்திலேயே ஓர் அடிக் குறிப்பு காணப்படுகிறது:

> 'சம்பசிவையங்கார், மேனகா என்பவை உண்மைப் பெயர்களை மறைக்கும் பொருட்டு வைக்கப்பட்ட கற்பனைப் பெயர்கள்'

என்று அந்தக் குறிப்பு விளக்குகிறது. இன்றைய நாவல்களில் வரும் 'பெயர்களும் சம்பவங்களும் கற்பனையே. உண்மை மனிதர்களையும் சம்பவங்களையும் குறிப்பிடுபவை அல்ல' என்ற சட்ட அடிப்படையில் முன்கூட்டியே விளக்கம் சொல்லிக் கொள்வது நடப்பியல் சித்திரங்களில் இன்றியமையாத நிபந்தனையாக அமைவதற்கு மாறாக, வடுவூராரின் குறிப்பு, மேனகா கதை உண்மை நிகழ்ச்சிகளின் அடிப்படையில் எழுந்த கற்பனை என்பதை உணர்த்துகிறது. மர்மங்களும் துப்பறிதலும் நுறைந்த இந்த நாவலில் வாசகர் மனதை ஈர்க்கும் சம்பவங்கள் பல கையாளப்பட்டிருக்கின்றன. உணர்ச்சி களின் உச்ச நிலையைத் தொடும் சம்பவங்களுக்கும் குறை வில்லை. பல அல்லல்களுக்குட்படும் மேனகா, ஒரு முஸ்லிம் பெண்ணின் உதவியினால் தன் கணவனை மீண்டும் அடை வது லட்சிய கதை மாந்தர்களின் செயலின் விளைவாக அமை கிறது. தமிழ்நாட்டின் பல்வேறு நகரங்களின் சமகாலச் சூழ் நிலை 1920களில் எழுதப்பட்ட இந்த நாவலில் தத்ரூபமாக விளங்குகிறது.

வடுவூர் துரைசாமி ஐயங்கார் நாவல்களில் மேனகாவை அடுத்து மிகப் பிரசித்தி பெற்றது கும்பகோணம் வக்கீல் அல்லது திகம்பர சாமியார் என்பது. பல மர்மங்களும், திடுக்கிடும் சம்பவங்களும் நிறைந்த இந்த நாவலில் தஞ்சைப் பிராந்தியத்தில் அன்று நிலவிய சூழ்நிலை வருணிக்கப்படுகிறது. கதையின் ஆரம்பமே பின்வருமாறு அமைந்திருக்கிறது:

'திருக்கண்ணமங்கை என்னும் சிற்றூர் தஞ்சை ஜில்லாவிலுள்ள மிக்க இரமணியமான ஒரு ஸ்தலம். அவ்வூரில் எக்காலத்திலும் ஓயாது குயிலினங்கள் தமது தீங்குரலமுதைச் சொரிந்து கொஞ்சிக் குலாவிக் குதூகலமாக வதிந்த தென்னஞ்சோலைகளுக்கிடையில், அச்சிற்றூரின் வேளாளரது தெரு அமைந்திருந்தது. அத்தெருவினிடையிலிருந்த ஒரு பெருத்த மச்சு வீட்டின் கூடத்தில் முப்பத்தைந்து வயதுள்ள ஒரு ஸ்திரீ தென்னங்கீற்று முடைந்து கொண்டிருந்தாள். அவளது கைகள் எவ்வளவு சுறுசுறுப்பாக வேலை செய்து கொண்டிருந்தனவோ அவ்வளவு சுறுசுறுப்பாகவே அவளது வாயிலிருந்து சொற்களும் வெளிப்பட்டு பக்கத்து அறையில் வாழைப் பூவை அரிவாள்மணையில் வைத்து நறுக்கிக் கொண்டிருந்த ஓர் அழகிய பெண்மணியின் செவிகளில் தாக்கிக் கொண்டிருந்தன.'

இவ்வாறு அழகாக சில காட்சிகளை வருணிக்கும் துரைசாமி ஐயங்கார் எழுத்திலே வாசகரைக் கவரும் உத்தி எங்கும் சிறந்து நிற்கிறது. 'கல்கிக்கு முன் அவ்வளவு தெளிவுடனும், அழகுடனும் வசனம் எழுதியவர்கள் வடுவூராரைத் தவிர வேறு யாருமில்லை என்று சொல்லி விடலாம்... தமிழ் வாசகர்களின் நாடியைப் பிடித்துப் பார்த்து அறிந்து எழுதியவர்களில் காலத்தால் முதன்மையானவர் வடுவூர் துரைசாமி ஐயங்கார்...' என்பது க.நா. சுப்பிரமணியத்தின் மதிப்பீடு *(படித்திருக்கிறீர்களா?-2)*.

வடுவூர் துரைசாமி ஐயங்காரின் செல்வாக்கைப் பயன்படுத்தி, குடும்பச் சூழ்நிலையை வைத்து, ஜனரஞ்சகமான நாவல்களை எழுதியவர் வை.மு. கோதைநாயகி அம்மாள்.

நன்றி: தமிழ் நாவலின் தோற்றமும் வளர்ச்சியும் - சிட்டி, சிவபாதசுந்தரம்.

# தமிழ்த் திரையில்... முதல் நாவல்

புராணக் கதைகளும், இதிகாசக் கதைகளும், ராஜா ராணிக் கதைகளும் படமாக எடுக்கப்பட்ட தமிழ்த் திரையின் தொடக்க காலத்தில்... முதன்முதலாக நாவலை அடிப்படையாகக் கொண்டு எடுக்கப்பட்ட படம் மேனகா.

அந்நாளின் புகழ் பூத்த எழுத்தாளர் வடுவூர் துரை சாமி ஐயங்கார் எழுதிய நாவல் இது.

திரைப்படமாக எடுக்கப்படுவதற்கு முன்பு மேனகா நாவல், நாடகமாகவும் வடிவமைக்கப்பட்டு பல தடவை மேடையேறி புகழ் பெற்றது. அப்போது, நடிகர் எம்.கே. ராதாவின் தந்தையார் எம். கந்தசாமி முதலி யார், மேனகா நாடகத்திற்கு வசனம் எழுதினார் *(டி.கே. சண்முகம் சகோதரர்கள்தான் இந்நாடகத்தைத் தயா ரித்து வழங்கியவர்கள்).*

1935-இல் மேனகா நாவலைப் படமாக்கிய பொழுது அதில் டி.கே. பகவதி, டி.கே. சண்முகம், என்.எஸ். கிருஷ்ணன், டி.கே. சங்கரன், எஸ்.வி. சகஸ்ரநாமம், கே.ஆர். ராமசாமி, டனை். சிவதாணு ஆகியோர் நடித்தனர். இவர்கள் அனைவருக்கும் இதுவே முதல் படம் என்பதும் குறிப்பிடத் தக்க செய்தி. எம்.எஸ். விஜயா, கே.டி. ருக்மணி ஆகியோரும் நடித்த இப் படத்தை இராஜா சாண்டோ இயக்கினார். பாரதி யாரின் பாடல் முதன் முதலாக ஒலித்த படம் என்ற வர லாற்றுப் பெருமையும் மேனகா படத்தையே சேரு கிறது.

நன்றி - பதிப்புத் தொழில் உலகம், ஜூலை 2004

# மதன கல்யாணி

★ ★ ★

1—ம் அதிகாரம்

## உல்லாச புருஷர்கள்

சீமைச் சரக்குகளும் புதிய நாகரிகங்களும் அன்னிய நாடுகளினின்று நேராக வந்திறங்குவதான சிறப்பு வாய்ந்த சென்னை மாநகரின் தென்மேற்கு பாகம் தேனாம்பேட்டை என்ற பெயரால் குறிக்கப்பட்டு வருகிறது. அது சுமார் இரண்டு மயில் நீள அகலம் பரவியதாகவும் ஆயிரக்கணக்கான அழகிய பங்களாக் களைக் கொண்டதாகவும் இருக்கிறது. சென்னையில் பெருத்த உத்தியோக பதவியை வகித்த ஐரோப்பிய துரைமார்களும், இந்திய வக்கீல்களும், ஐரோப்பிய வர்த்தகர்களும் அந்தப் பங்களாக்களில் வசித்ததன்றி, சென்னை ராஜதானியின் ஒவ்வொரு ஜில்லாவிலும் உள்ள முக்கியமான சில சமஸ்தானத்து ஜெமீந்தார்களும், போலி மகாராஜாக்களும் ஏராளமான தங்களது செல்வத்தைச் செலவிட்டு நவநவமான சுகபோகங்களை எல்லாம் அனுபவித்துக் குதூகலமாகத் தங்களது பொழுதைப் போக்கும் பொருட்டு இங்கு வந்து பங்களாக்கள் வாங்கி அவற்றில் வசித்து வந்தனர். அவைகளில் மனோகரமான அழகிய பூச்செடிகள் நிறைந்த சோலைகளும், மரங்கள் அடர்ந்த தோப்புகளும், தாமரை, அல்லி, நீலோற்பலம் முதலியவை தவழ்ந்த தடாகங்களும், வாவிகளும் பெரும்பாலும் சூழ்ந்து, அவற்றில் வசிப்போர் தாம் இருப்பது மண்ணுலகத்திலோ விண்ணுலகத்திலோ என்று சந்தேகிக்குமாறு நறுமணந் தூவித் தீங்கனி உதிர்த்துக் குளிர்ச்சியும் இன்பமும் கொள்ளையாகச் சொரிந்து சிங்காரமாய் விளங்கின. ரிஷியின் ஆசிரமம் எனத் தகுந்த இத்தகைய வனமாளிகை ஒன்றனுள், ஒரு நாள் மாலைப் பொழுதில் இந்தக் கதை தொடங்குகிறது.

அப்போது சூரியன் மேற்றிசையில் மறையும் தருணத்தில் இருந்தான். அவனது அழகிய செங்கிரணங்கள் அந்தச் சோலையின்

மரங்களிலும், செடிகளிலும், பழுத்துத் தொங்கிய கனிகளின் மீதும் வாவியிலிருந்த தண்ணீரின் மேற்புறத்திலும் தவழ்ந்து அவற்றின் இயற்கை அழகைப் பன்மடங்கு பெருக்கிக் காட்டின. குயிலினங்கள் யாவும் அங்கிருந்த பழங்களைச் சுயேச்சையாகத் தின்று, பளிங்கெனத் தெளிந்த தண்ணீரைப் பருகி, செருக்கடைந்து ஆனந்த பரவசமுற்று மெய்ம்மறந்து தமது தீங்குரலை எடுத்துப் பாடி இனிமையை அள்ளி இறைத்துக் கொண்டிருந்தன. கிள்ளை களும், அணில்களும் தத்தம் பெண்டு பிள்ளைகளோடு கொஞ்சிக் குலாவிக் குதூகலமாகத் துள்ளிக் குதித்துப் பண்டிகை கொண்டாடின.

மாளிகைக்குள் நன்றாக அலங்கரிக்கப்பட்டிருந்த விசாலமான ஒரு கூடத்தின் ஒரு புறத்தில் சாய்மான நாற்காலி ஒன்றன் மேல், நாற்பத்தைந்து வயதடைந்த ஒரு ஸ்திரீ சாய்ந்து மூக்குக் கண்ணாடி அணிந்த கண்களினால் ஏதோ ஒரு புஸ்தகத்தைப் படித்துக் கொண்டிருந்தாள். இன்னொரு மூலையில் பிரம்புப் பாய் விரிக்கப் பட்ட தரையில் ஓர் அழகிய யௌவன மங்கை உட்கார்ந்து, தனக்கெதிரில் இருந்த வீணையை மீட்டி, ஹம்ஸத்வனி ராகத்தை எடுத்து அற்புதமாக ஆலாபனை செய்து, இந்த இனிய இசை யோடு தனது மாதுரியமான குரலைப் புணர்த்தி அமிர்தத் துளிகளை வாரி ஜிலீர் ஜிலீரென்று வீசிக் கொண்டிருந்தாள். அவளது வயது பதினைந்து அல்லது பதினாருக்கு மேல் இராது. அழகும் இளமையும் உருக்கொண்டு வந்தனவோ என அமைந் திருந்த அவளது அற்புதமேனி எவ்விதமான குற்றம் குறை பாடின்றித் தேஜோமயமாக விளங்கியது. உச்சி முதல் உள்ளங் கால் வரையில் உள்ள ஒவ்வொர் அங்கமும் சம்பூரணமான வளர்ச்சியும் உன்னத வனப்பும் பெற்று, காண்போர் மனதையும் கண்களையும் கவர்ந்து கலக்கின. சுருண்டு சுருண்டு நெளிந்து சென்றிருந்த சிரத்தின் உரோமமும், கயல்மீன் பிறழ்ந்த கண்களும் மாதுளை மலர் போலச் சிவந்து கனிந்து தேன் ததும்பிய அதரங்களும், முல்லை அரும்பின் பத்திகளைப் போலிருந்த மாசற்ற பற்களும், தந்தத்தில் கடைந்தெடுத்த சிமிழ் போலக் கவிழ்ந்திருந்த கன்னங்களும் ஒன்று கூடிய சுந்தரவனத்தில் மந்த ஹாசமும் மகிழ்ச்சியும் இயற்கையிலேயே தவழ்ந்து, அவளது நற்குணத்தையும், கபடமற்ற சுபாவத்தையும் எளிதில் காட்டின.

அவள் தனது வாயைத் திறந்த போதெல்லாம் வலது கன்னம் அழகாகக் குழிந்து அவன் மேம்பட்ட சுகபோகங்களுக்கு உரியவள் என்று ஓயாமல் விளம்பரப்படுத்திக் கொண்டிருந்தது. தங்கப் பதுமையைப் போலிருந்த அந்த உன்னத மடந்தையின் எந்த அங்கத்தை நோக்கினாலும், மனம் தெவிட்டாமல் அதை விட்டு வேறொன்றிற் செல்ல மாட்டாமல் பிரமித்து அப்படியப் படியே அந்த அழகில் ஈடுபட்டு மயங்கி நின்றது. அவளது முடி முதல் அடிவரையில் உள்ள எந்தப் பாகத்தைப் பார்த்தாலும் அற்புதமான அழகு ஜ்வலித்துக் கண்கொள்ளாக் காட்சியாக அமைந்து இன்பத்தையும் சஞ்சலத்தையும் உண்டாக்கியது. மிருதுத் தன்மையும், கற்பின் உறுதியும், பெருந்தன்மையும், நற்குல ஒழுக்கமும், நாணம், மடம், அச்சம், பயிர்ப்பென்னும் பெண்டீர் தன்மைகளும் சுடர்விட்டு ஔிர்ந்த ஔிர்ந்த அருங்குண மணியான அப்பெண் பாவையைக் கண்ட மாத்திரத்தில், உலகைத் துறந்த தபசிகளும் கலக்கம் அடைந்து "சுவர்க்க லோகமே பெண்ணுருவாகத் தோன்றி இவ்வுலகில் இருக்கையில் வீணிலே உலகைத் துறந்து விட்டோமே" என்று வருந்தத் தக்க சிறப்பு வாய்ந்தவளாக இருந்தாள்.

இத்தகைய ரூபலாவண்ணியம் பொருந்திய நங்கைக்கு அவளது பெற்றோர் கண்மணியம்மாள் என்று பெயர் சூட்டியது முற்றிலும் பொருந்தும் அல்லவா. அந்த அழகிய மடமங்கை கிருஷ்ணாபுரம் சமஸ்தானத்து ஜெமீந்தாரது தம்பியின் தம்பியின் புதல்வி; குழந்தைப் பருவத்திலேயே தாய் தகப்பன்மாரை இழந்தவள்; தந்தையோடு பிறந்த அத்தையினால் மிகவும் அருமையாக வளர்க்கப்பட்டவள். மீனாக்ஷியம்மாள் என்று பெயர் பூண்ட அந்த அத்தையே, முன் கூறப்பட்டபடி சாய்மான நாற்காலியில் புஸ்தகம் படித்திருந்தவள்; மீனாக்ஷி அம்மாளுக்கு, இறந்து போன தனது கணவனது நிலங்களில் இருந்து வருஷம் ஒன்றுக்குப் பதினாயிரம் ரூபாய் வருமானம் வந்துக் கொண்டிருந்தது. அவளுக்குச் சந்தானமில்லாமற் போனமையால், அவள் கண்மணி அம்மாளையும் அவளுக்கு முன் பிறந்தவனான துரைராஜா என்றவனையும் தனது சொந்த மக்களைப் போல அன்பும் ஆதரவும் சுரக்க, செல்வமாகவும் சிறப்பாகவும் வளர்த்து வந்தாள்;

இருவருக்கும் நன்றாகக் கல்வி கற்பித்ததன்றி, கண்மணியை வீணை வாசிப்பதில் பயிற்றுவிக்க வேண்டும் என்ற எண்ணத் தோடு வீணைவித்துவான் ஒருவனையும் அமர்த்தி இருந்தாள்.

இந்தக் கதை தொடங்கிய மாலையில் கண்மணியம்மாள் ஹம்ஸத்வனி வாசித்தபோது, அந்த வீணை வித்துவான் அவளுக்குச் சற்று தூரத்தில் மிகவும் மரியாதையாக விலகி உட்கார்ந் திருந்தான்; அவன் மைசூரில் இருந்த மகாவித்துவான் ஒருவரது மகன் என்பதும், அவனும் தந்தையைப் போலவே கீர்த்தி வாய்ந்தவன் என்பதும் எல்லோருக்கும் தெரியவே, ஜெமீந்தார் களின் பங்களாக்களில் உள்ள சிறுவர் சிறுமியர்களுக்கெல்லாம் வீணை கற்பிக்கும்படி அவனை ஏற்படுத்திக் கொண்டனர். மதனகோபாலன் என்ற அழகிய பெயர் கொண்ட வீணை வித்துவானாகிய அந்த யௌவனப் புருஷன் தனது பெயருக்குத் தக்கபடி மன்மதனை வென்ற அழகும் சிவந்த மேனியும் நற்குண நல்லொழுக்கமும் ஆண்மையும் கூரிய புத்தியும் கல்வித் திறமையும் முகத்திலேயே ஜ்வலிக்கப் பெற்றவனாக விளங்கி னான். அவன் தனது நிலைமைக்குத் தகுந்தபடி மரியாதை பணிவு அடக்கவொடுக்கம் முதலியவற்றைப் பெரிதும் காட்டி மிருது வாகவும் அழகாகவும் பேசி கண்மணிக்கு ராக ஆலாபனை பயிற்றிக் கொண்டிருந்தான். கண்மணியம்மாளோ, தான் ஜெமீந் தாரது வீட்டுப் பெண் என்ற நினைவினால் செருக்கடைந்து அவனை அசட்டை செய்தவளாய்க் காணப்படாமல் ஒரு குருவிடம் பணிவாகக் கல்வி கற்றுக் கொள்ளும் சீஷனைப் போல பயபக்தியோடு ஒழுகி, அவனது வாக்குக்கு எதிர்வாக்கின்றி வித்தை கற்று வந்தாள்.

இவர்கள் இங்ஙனம் இருக்க, அந்த மாளிகையின் மேன் மாடியில் கொலு மண்டபத்தைப் போல அலங்கரிக்கப்பட்டிருந்த ஒரு விடுதியில் அதே காலத்தில் இரண்டு யௌவனப் புருஷர்கள் சம்பாஷித்துக் கொண்டிருந்தனர். அவர்களுள் ஒருவன் கண்மணி யம்மாளின் தமயனான துரைராஜா என்பவன். அவனுக்கு இருபத்து மூன்று வயதிருக்கலாம். அவன் உயர்வான சிவந்த அழகிய மேனியைக் கொண்டவன். அவனோடு இருந்த மற்றவன்

மற்றவன் மாரமங்கலம் என்ற பெருத்த சமஸ்தானத்து ஜெமீந்தாரின் ஏகபுத்திரன்; அவன் தந்தையற்றவன்; வயது பதினேழிருக்கலாம். அவன் குள்ளமான கருத்த மேனி உடையவன். அவனுக்கே கண்மணியம்மாளை மணம் புரிவிப்ப தென்று, அவனது தாயான கல்யாணி அம்மாளாலும் மீனாக்ஷி அம்மாளாலும் முடிவு செய்யப்பட்டிருந்தது.

துரைராஜா என்பவன் நன்றாகப் படித்தவன் ஆனாலும், அவன் தனது கல்வியை நல்ல வழியில் உபயோகிக்காமல், தீய வழிகளில் பயன்படுத்தும் துர்க்குணம் உடையவன். நாணயம் நல்லொழுக்கம் என்பவைகளுக்கும் அவனுக்கும் வெகு தூரம்; எத்தகைய துர்நடத்தைக்கும் அவன் பின்வாங்காதவன். மாரமங்கலம் மைனரோ பிஞ்சில் பழுத்தவன்; மூடபுத்தியும், அசட்டுத் துணிவும், அசங்கியமான மொழிகளையே உபயோகிக்கும் இழிகுணமும், கரைகடந்த செருக்கும், ஆணவமும், கோரரூபமும், கூனல் முதுகும், யாவரையும் தூஷித்து அலட்சியமாக எடுத் தெறிந்து பேசுந்தன்மையும் பெற்றவன். அவ்விருவரும் ஒரு நிமிஷ நேரமும் பிரியாமல் மிகவும் அந்தரங்கமான நண்பர்களாக இருந்தார்கள். ஆனால் அவர்கள் இணை பிரியாமல் இருந்தது நட்பென்னும் உண்மையான வாத்சல்யத்தினால் கட்டுப்பட்டு இருந்ததன்று ஒரு துஷ்டனுக்கு இன்னொரு துஷ்டனது துணையும் உதவியும் அவசியமாக வேண்டி இருந்தன. துரைராஜாவின் விளையாட்டுச் செல்வுக்கு மீனாக்ஷியம்மாள் சொற்பமான பணமே கொடுத்து வந்தாள். மைனருக்கோ பெருத்த பணத்தொகை மாதம் மாதம் வந்து கொண்டிருந்தது. துரை ராஜாவுக்கோ சென்னையில் உள்ள விலைமாதரிடம் எல்லாம் நட்புண்டு. மைனருக்கு அந்த விஷயத்தில் பழக்கம் இல்லை. துரைராஜாவின் நட்பிருந்தால், அவனது நட்பினரான பெண்பாலார் யாவரும் தனக்கும் நட்பினராக ஆவார்கள் என்பது மைனரது கருத்து. மைனரது நட்பிருந்தால், அவனது பணப்பையில் எட்டியமட்டும் தனது கையை நுழைக்கலாம் என்பது துரைராஜாவின் எண்ணம். நிற்க, துரைராஜா என்பவன் உலக விஷயங்களில் நன்றாக அடிபட்டவன்; உலகத்தில் என்னென்ன துன்மார்க்கங்கள் இருக்கின்றன என்பதைக் கரைகண்டவன். சென்னையில்

இன்னின்ன இடத்தில் இன்னின்ன திருவிளையாடல்கள் நடக்கின்றன என்பது அவனுக்கு மனப்பாடம்; அவனுடன் இருந்தால் தானும் அவனைப் போலவே தேர்ச்சி அடையலாம் என்பது மைனரது கருத்து. இவ்வாறு அவ்விரு தூர்த்த சிகாமணிகளும் ஒருவரை ஒருவர் துணையாகப் பற்றிக் கொண்டிருந்தனர்.

அவ்விருவரும் முதல் நாள் இரவில், வி.பி. ஹாலில் நடந்த நாடகம் (Drama) பார்த்தவர் ஆதலின், அன்றைய பகலில் பன்னிரண்டு மணிக்கெழுந்து போஜனம் முடித்துக் கொண்டு படுத்தவர்கள் சற்று முன்னரே எழுந்து சிற்றுண்டி அருந்தி கையில் சிகரெட்டைப் பிடித்துக் கொண்டு சீட்டாட உட்கார்ந்தனர். முதல் நாள் இரவில் பார்த்த நாடகக் காட்சிகளே அவர்களது அகக் கண்ணில் அப்போது வந்து கொண்டிருந்தன. இன்பகரமான அந்த நினைவுகளிலேயே அவர்கள் ஈடுபட்டிருந்தமையால், அதைப் பற்றியே பேசத் தொடங்கினர். அப்போது மைசூரில் இருந்து பாலிகா மனமோகன நாடகக் கம்பெனி என்ற பெயருடைய ஒரு கூட்டத்தார் சென்னைக்கு வந்து, சில தினங்களாக வி.பி. ஹால் என்னும் கட்டிடத்தில் ஆடிக் கொண்டிருந்தார்கள். அந்தக் கம்பெனியின் சொந்தக்காரர் ஆண் பிள்ளை ஆனாலும், அதில் தோன்றி நடித்தோர் யாவரும் பெண்பாலராகவே இருந்தனர். அவர்கள் யாவரும் நன்றாகப் படித்தவர்கள்; 8-வயது முதல் 25-வயதுக்கு மேல்படாத யௌவனப் பருவமும் ஒருவரைப் போல் எல்லோரும் கந்தருவ ஸ்திரீகளைப் போலத் தேர்ந்தெடுக்கப் பட்ட கண்கொள்ளா வனப்பு வாய்ந்த மனமோகன சுந்தர ரூபிணிகள். அவர்கள் ஒவ்வொருவரும் தத்தம் வேஷங்களைத் தத்ரூபமாகத் திறமையோடு நடித்ததன்றி ஒவ்வொருவரும் பார்சீ நாட்டியம், இங்கிலீஷ் டான்ஸ், பரத நாட்டியம் முதலியவற்றிலும் அற்புதமாகப் பயிற்றப் பட்டிருந்தனர். ஒவ்வொருவரும் தனித்தனியாக நாட்டியம் ஆடினாலும், பலர் ஒன்றுகூடி நாட்டியம் ஆடினாலும், எவ்வகை யாலும் அந்த நடனம் மெச்சத் தகுந்ததாகவே இருந்தது. அவர்கள் சென்னைக்கு வந்த சொற்ப காலத்திற்குள் எத்தனையோ தங்கப் பதக்கங்களும் வேறுவிதமான பரிசுகளும் பெற்றுவிட்டதன்றி, நாடகம் பார்க்கச் சென்றோரின் மனதை மயக்கி அவர்கள் இரவு பகல் அதே நினைவைக் கொண்டு

தவித்து நிற்கும்படி பித்தர்களாக்கி விட்டனர். அந்தப் பெண்மக்கள் யாவரிலும் மேலான வளுக்கு மோகனாங்கி என்று பெயர். அவள் மகாவிஷ்ணுவின் மோகனாவதாரத்தைப் போலவே சிருஷ்டிக்கப் பட்டிருந்தாள். அவள் மைசூர்க் கலாசாலையில் பி.ஏ. பரீட்சையில் படித்துத் தேறினவள்; அழகிலோ அவளுக்கிணை அவளேயன்றி மற்றவரை அவளுக்கு இணை சொல்வது சிறிதும் பொருந்தாது. அவள் ஸ்திரீ வேஷம் போட்டு வந்து விடுவாளானால் ஜனங்களின் மனதை முதலில் இருந்து கடைசி வரையில் காந்தம் போலக் கவர்ந்த வண்ணம் இருப்பாள். ஒரு நொடியில் ஜனங்களைச் சிரிக்கச் செய்வாள்; அடுத்த நொடியில் அவர்கள் கண்ணீர் சொரிந்து கதறி அழும்படி செய்து விடுவாள், அவளது குரலோ குயிலையும் யாழையும் பாகையும் தேனையும் தோற்கச் செய்வது. நாட்டியத்திலோ ஊர்வசி, திலோத்தமை என்னும் இந்திர லோகத்து தாசிகள் எப்படி நடிப்பார்கள் என்பதை பூலோகத்து ஜனங்கள் கண்டு அனுபவிக்கும்படி செய்பவள் அவளது தேகத்தின் அற்புதமான அமைப்பும் ஜாஜ்வல்லியமான வனப்பும் அவளைப் படைத்த சர்வ வல்லமையுள்ள ஈசுவரனையே மயக்கத் தக்கதாய் இருந்தன. அவளிடத்தில் இத்தனை மேம்பாடுகள் இருந்தும், அவள் ஒவ்வொரு நாளும் ஆயிரக்கணக்கான ஜனங் களுக்கு முன் வந்து நடிப்பவளானாலும், அவள் அந்தரங்கத்தில் மகாநற்குண நல்லொழுக்கம், அடக்கவொடுக்கம், பரபுருஷரை விஷமென மதிக்கும் பதிவிரதைக் குணம் முதலிய அரிய மேம்பாடுகளைப் பெற்றிருந்தாள். சென்னை முற்றிலும், அதைச் சுற்றி நெடுந்தூரம் வரையிலும் உள்ள நாடக விருப்பம் உள்ள ஜனங்கள் எல்லோரும் அவளது சிறப்பைப் பற்றி புகழ்ந்து பேசி தங்களது பொழுதை எல்லாம் வீண் பொழுதாகப் போக்கிக் கொண்டிருந்தனர். பெருத்த பெருத்த மகாராஜர்கள் எல்லாம் அவளோடு தனிமையில் ஒரு வார்த்தை சொன்னாலும் தங்களது ஜென்மம் கடைத்தேறி விடும் என்று நினைத்ததன்றி, அவள் பொருட்டு தங்களது உடல் பொருள் ஆவி ஆகிய சகலத்தையும் அர்ப்பணம் செய்யத் தயாராக இருந்தனர். இவ்விஷயமாக அவளுக்கு ஒவ்வொரு நாளும் நூறு கடிதங்களுக்கு மேல் தபால் மூலமாகவும் ஆட்கள் மூலமாகவும் அனுப்பப்பட்டு வந்தன.

அவள் எதையும் திறந்து கூடப்பாராமல், அப்படியே அடுப்பிற்குள் எறிந்து விடுவாள். அவளைப் பலவந்தமாகத் தூக்கிக் கொண்டு போய்விட வேண்டும் என்று பல சமஸ்தானாதிபதிகள் நினைத்தனர். ஆனால் அவள் எந்த இடத்தில் தங்குகிறாள் என்பதை ஈசுவரனும் காண முடியாமல் இருந்தது. அந்த நாடகத்தில் நடித்த பெண்களில் முக்கியமான சில நடிகைகள் மாத்திரம் தமக்கு விருப்பமான வேறிடங்களில் சுயேச்சையாக வசிக்கும்படி அனுமதிக்கப் பட்டிருந்தனர். மற்ற சிறுமியர் யாவரும் புரசைப்பாக்கத்தில் ஒரு தனியான பங்களாவில் நாடகத்தின் எஜமானனுடன் கூடவே அவனது பார்வையில் இருந்தனர். இந்த நாடகம் சென்னைக்கு வந்த பிறகு அவர்கள் ஆடிய ஆட்டங்களுக்கெல்லாம் தவறாமல் போனவர்களுள் துரைராஜாவும் மாரமங்கலம் மைனரும் முக்கிய மானவர்கள்.

கதைத் தொடக்கத்தில் இவ்விருவரும் சீட்டாட உட்கார்ந்தார்கள் அல்லவா? அப்போது கீழே கண்மணியம்மாள் வீணையை மீட்டிப் பாடிய இன்னிசை மேலே எட்டியது. அதைக் கேட்ட மைனர் ஜெமீந்தார், "துரைராஜ்! மோகனாங்கியின் பாட்டைக் கேட்ட காதுக்கு, இது எப்படி இருக்கிறது பார்த்தாயா? இது பாட்டாகவே இல்லை. ஒப்பாரி சொல்லி அழுவது போலிருக்கிறது" என்று கூறி நகைத்தான். தனது தங்கையின் பாட்டை மிகவும் இழிவாக மைனர் தூஷித்ததைக் கேட்டும் துரைராஜா ஆயாசம் என்பதே கொள்ளாதவனாய் அதை ஆமோதிப்பவன் போலப் புன்னகை செய்த வண்ணம் சீட்டாட்டத்தைக் கவனித்தான். அதன் பிறகு இரண்டொரு நிமிஷ நேரம் இருவரும் மௌனமாக தங்களது வேலையைப் பார்த்தனர். திரும்பவும் மைனர் துரைராஜாவைப் பார்த்து, "நமது கண்மணிக்கு வீணை கற்றுக்கொடுக்கும் மதன கோபாலன் எவ்வளவு அழகாயிருக்கிறான், பார்த்தாயா? அவனுடைய ஜாதி என்னவென்று சொல்ல உன்னால் முடியுமா? எங்கே, உன் சாமர்த்தியத்தைப் பார்க்கலாம்" என்றான்.

துரைராஜா புன்னகை செய்து, "இப்படித்தான் என்னுடைய சாமர்த்தியத்தைப் பார்க்கிறதா? ஒரு பெண்பிள்ளையைக் காட்டி அவள் என்ன ஜாதி என்றால், பத்மினி, சித்தினி, சங்கினி, அத்தினி

என்ற ஜாதிகளுள் அவள் எதில் சேர்ந்தவள் என்பதை நான் உடனே சொல்லி விடுவேன். ஆண்பிள்ளைகளுடைய ஜாதியைக் கண்டுபிடிக்க என்னால் ஆகுமோ" என்றான்.

அதைக் கேட்ட மைனர் குலுங்கக் குலுங்க நகைத்து "இவ்வளவு தானா உன் சாமர்த்தியம்! இதற்கு முன் இவனைப்பற்றி நான் விசாரித்ததில்லை. இருந்தாலும், இவன் ஒரு தாசியின் மகனாய்த் தான் இருக்க வேண்டும். அதனாலே தான் வீணை வாசிப்பதில் இவ்வளவு திறமை இருப்பதோடு, உடம்பும் உருளைக்கிழங்கு போல மொழுமொழு என்று இருக்கிறது. இவனுடைய முகக் களையும் முகவெட்டும் பெண் பிள்ளையினுடையதைப் போலவே இருக்கின்றன. அதனாலே தான் இவனை முதலில் பார்த்த அன்றைக்கே நான் ஆக்ஷேபித்தேன். என்னுடைய தங்கைகள் இருவருக்கும் இவன் வீணை சொல்லிக் கொடுக்கக் கூடாது என்று நான் அம்மாளோடு நேற்று சாயங்காலம்கூட சண்டை போட்டேன். இவன் இங்கேயும் வந்து கண்மணிக்கு வீணை கற்றுக் கொடுப்பது எனக்குக் கொஞ்சமும் சம்மதமாக இல்லை. எப்படியாவது அத்தையம்மாளிடம் சொல்லி இவன் வரு வதை நிறுத்திவிடு. வீணை வாசிக்காவிட்டாலும், கண்மணியை நான் கண்மணியாகவே பாவிப்பேன் என்பது உனக்குத் தெரியாதா?" என்றான்.

அதைக் கேட்ட துரைராஜா சந்தோஷப் பார்வையாக மைனரை நோக்கி, "அப்படியே செய்யலாம்; அதிருக்கட்டும், மாப்பிள்ளை! கையில் செலவுக்கு ஒரு காசுகூட இல்லை. எங்கே போனாலும் கடன்காரர்கள் தொந்தரவு செய்கிறார்கள். பெரியப்பன் மாதாமாதம் எனக்கு அனுப்பும் ஐந்நூறு ரூபாய் ஐந்தே நாளைக்கு வருகிறது. அத்தையம்மாள் கொடுப்பது அடுத்த நாளே போய்விடுகிறது. ஒவ்வொரு மாசமும் பணத் தொல்லையே பெரிய தொல்லை யாகப் போய்விட்டது. இப்போது எனக்கு மொத்தமாக இரண்டாயிரம் ரூபாய் வரையில் கடன் இருக்கிறது. இந்தச் சமயம் நீ தான் என்னுடைய மானத்தைக் காப்பாற்ற வேண்டும்" என்றான்.

**மைனர்:-** இப்போது பங்களாவை விட்டு வரும் போதுகூட எனக்கும் என்னுடைய அம்மாளுக்கும் பெருத்த சண்டை நடந்தது. பணம் கேட்டால் அவள் கொடுக்கிறதே இல்லை. நான்

இவ்வளவு பெரிய சமஸ்தானத்தின் அதிபதி ஆகப் போகிறவன் என்பதை அவள் கொஞ்சமும் நினைக்கிறதில்லை. இன்னம் ஒரு வருஷம் போனால் நான் மேஜர் ஆகிவிடுவேன்; எல்லாரையும் கண்ணில் விரல்விட்டு ஆட்டி விடுவேன். எனக்கு அம்மாள் ஒருத்தி, வேறே இரண்டு வக்கீல்கள் ஆகிய மூவரும் கார்டியனாக அமைந்திருக்கிறார்கள் என்பது உனக்குத் தெரிந்த சங்கதி. அம்மாளையாவது மிரட்டி ஏதாவது பணம் வாங்கி விடலாம். அந்த வக்கீல்கள் பரமலோபிகள். எனக்கு மாசம் ஒன்றுக்கு இரண்டாயிரம் ரூபாய் தான் கொடுப்போம் என்றும் அதற்கு மேல் ஒரு காசும் கொடுக்க மாட்டோம் என்றும் கண்டிப்பாகச் சொல்லி விட்டார்கள். இனிமேல் வேறே வழியில்லை. நீ சொன்னபடி நாட்டுக்கோட்டைச் செட்டிகளிடத்தில் பாதித் தொகை வாங்கிக் கொண்டு முழுத்தொகைக்குப் பத்திரம் எழுதிக் கொடுக்க வேண்டியது தான் வழி. இன்னம் ஒரு வருஷம் கழித்துப் பணத்தை வாங்கிக் கொள்ளட்டும் — என்றான்.

***துரைராஜா:-*** அப்படியானால் அண்ணாமலை செட்டி என்று எனக்குத் தெரிந்தவன் ஒருவன் இருக்கிறான். அவனிடம் இப்போதே போய் காரியத்தை முடிப்போம். எனக்கு இரண்டாயிரம் வேண்டும், உனக்கு எவ்வளவு வேண்டும்?

**மைனர்:-** எனக்கு மூவாயிரமாவது வேண்டும்.

***துரைராஜா:-*** சரி; மொத்தத்தில் ஐயாயிரம் வேண்டும். இரண்டு வட்டி போட்டு பதினாயிரத்துக்குப் பத்திரம் எழுதிக் கொடுத்தால், பணம் வந்துவிடும்.

**மைனர்:-** போனால் போகிறது, அப்படியே எழுதிக் கொடுத்து விடுவோம். அந்த மாத்திரம் முடிப்பது போதாது. இன்னொரு முக்கியமான காரியம் இருக்கிறது. அதற்காகவே நான் சாப்பிட்ட உடனே இங்கே ஓடிவந்தேன். இல்லாவிட்டால், நேற்று ராத்திரி தூக்கம் இல்லாமல் இருந்ததற்கு இன்று பகல் முழுதும் தூங்கி இருப்பேன். அந்த விஷயத்தை முடித்துக் கொடுப்பதும் உன்னுடைய பொறுப்பு நீ மனசு வைத்தால் அந்தக் காரியம் அவசியம் முடியும்.

*துரைராஜா:-* (புன்சிரிப்போடு), அது என்னால் ஆகக் கூடியதாக இருந்தால், அடுத்த நொடியிலேயே செய்து விடுகிறேன். அது என்ன காரியம்? சொல்.

*மைனர்:-* ஓகோ! ஒன்றையும் அறியாதவன் போலக் கேட்கிறாயோ! அது இன்னதென்பது உனக்குத் தெரியாதோ?

*துரைராஜா:-* தெரியவில்லையே.

*மைனர்:-* பெருத்த பெருத்த கைகளை எல்லாம் பார்த்த உனக்கு இது ஓர் அரிய விஷயமல்ல. நேற்று ராத்திரி மோகனாங்கி பாடிக் கொண்டு பார்சீ டான்ஸ் ஆடியதைக்கண்ட முதல் என் மனம் அப்படியே தவித்து டான்ஸ் ஆடிக்கொண்டே இருக்கிறது. தேகம் கொதித்துக் கட்டுக்கடங்காமல் பதறி நிற்கிறது. நான் படும் வாதையைக் கொஞ்சமும் சகிக்கவே முடியவில்லை. இதனால் உயிர் போனாலும் சரி; என்னுடைய சொத்தெல்லாம் ஒழிந்தாலும் கவலை இல்லை. எப்படியாவது அந்தப் பெண்ணரசியிடம் ஒரு பேச்சாவது பேசினால் போதும். அவளோடு தனிமையில் பேசும் படியாக, நீ பழக்கம் செய்து வைத்துவிட வேண்டும். நீ மனசு வைத்தால், இது ஒரு பெரிய காரியமல்ல – என்றான்.

*துரைராஜா:-* (ஆசியமாக) சரி; சரி; நல்ல வேலை தான். இது கண்மணிக்குத் தெரிந்தால், அவள் என்ன சொல்வாள் தெரியுமா? அவளுடைய சொந்த தமயனாகிய நானே, மாப்பிள்ளைக்கும் கூத்தாடிச்சிக்கும் சிநேகம் செய்து வைக்கிறதென்றால், அவளும் அத்தையம்மாளும் என்ன செய்வார்கள் தெரியுமா? என்னை உடனே பங்களாவைவிட்டு துரத்திவிடுவார்கள் – என்றான்.

*மைனர்:-* (புன்சிரிப்பாக) துரத்தி விட்டால் நல்லதாகிவிட்டது. என்னுடைய பங்களாவுக்கு வந்துவிடு. முதலில் இந்தச் சங்கதி அவர்களுக்குத் தெரியவே போகிறதில்லை. தெரிந்தாலும், அதனால் குற்றமும் இல்லை. நான் மேஜர் ஆக இன்னம் ஒருவருஷ காலத்துக்கு மேல் இருக்கிறது. அதன் பிறகே எனக்குக் கலியாணம் செய்ய வேண்டும் என்று என் தகப்பனாருடைய மரண சாசனத்தில் எழுதி வைத்திருக்கிறார். ஒன்றரை வருஷத்துக்குப் பிறகு கண்மணியை அடைவதை நினைத்து இப்போது முதல் நான் சந்நியாசியாக இருந்து தபசு பண்ண வேண்டுமோ? – என்றான்.

அதைக் கேட்ட துரைராஜா, "இல்லை மாப்பிள்ளை! நான் விளையாட்டுக்குச் சொன்னேன். ஆண்பிள்ளை என்றால் ஆயிரம் ரகசியம் இருக்கும். இதென்ன துவாபரயுகமா? அந்த யுகத்திலேயே ராமர் ஒருவர் தானே ஏகபத்னி விரதராய் இருந்தார். மற்றவர் இராவணனைப் போலத்தானே இருந்தார்கள். இந்தக் காலத்தில் கட்டுப்பாட்டில் நிற்கும்படி யாராவது சொன்னால் புருஷர்கள் கேட்பார்களா? அது இல்லை. அதிலும் இந்த மோகனாங்கியைக் கண்டால் யாருக்குத்தான் மனம் கலங்காது. அந்த ராமரே இவளைப் பார்த்திருந்தால், அவருடைய ஏகபத்னி விரதம் எல்லாம் பஞ்சாகப் பறந்து போயிருக்காதா; முதலில், நேற்று முதல் என் மனம் படும் பாட்டை நான் என்னவென்று சொல்லப் போகிறேன். முடவன் கொம்புத்தேனுக்கு ஆசைப்படுவது போல நான் இன்று பகல் முழுதும் இன்பக் கனவு கண்டு கொண்டே தூங்கினேன். இந்த விஷயங்களில் அதிகமாக உழன்ற என் நிலைமையே இப்படி இருந்தால், அவ்வளவு அனுபோகம் இல்லாத உன்னைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமா? இந்த விஷயத்தில் எனக்கு எவ்வித ஆட்சேபணையும் இல்லை. ஆனால் நம்முடைய ஆசை பலிக்க வேண்டுமே. அது தான் யோசனையாக இருக்கிறது. அவள் சீனத்துச் சரக்காய் இருக்கிறாளே; முதலில், அவள் எங்கே இருக்கிறாள் என்பதை வெளியில் தெரியாமல் அல்லவா மறைந்து கொண்டிருக் கிறாள். நாடகக் கம்பெனியின் எஜமானனுக்கும், அதன் மானே ஜருக்கும் அவள் இருக்கும் இடம் தெரியுமாம். அவர்கள் உயிர் போவதானாலும் அதை வெளியிடமாட்டார்கள். அவளுடைய இருப்பிடத்தை முதலில் கண்டுபிடிக்க நாம் வழிதேட வேண்டும்."

**மைனர்:-** அதை எளிதில் கண்டுபிடித்து விடலாம். அவள் ராத்திரியில் நாடகம் முடிந்த பிறகு ஏதாவது ஒரு வண்டியில் ஏறிக் கொண்டு தானே தன்னுடைய வீட்டுக்குப் போவாள். பைசைக்கில் வண்டியோடு ஓர் ஆளைத் தயாராக வைத்திருந்து, வண்டியைத் தொடர்ந்து போகும்படி செய்தால், அவள் இறங்கும் இடத்தை அவன் கண்டுபிடித்துக் கொள்ளுகிறான்.

**துரைராஜா:-** அது நல்ல யோசனை தான். அப்படியே செய்து விடலாம். என்னுடைய தவசிப்பிள்ளை பொன்னம்பலத்தை இரந்

விஷயங்களில் நான் நன்றாகப் பழக்கி வைத்திருக்கிறேன். இன்றைய ராத்திரி அவனை விட்டால், அவள் எமலோகத்துக்குப் போனாலும் அவன் கூடவே போய் இடத்தைப் பார்த்துக் கொண்டு வந்துவிடுவான். அது போகட்டும். இடம் தெரிந்ததாக வைத்துக் கொள்வோம். அதன் பிறகு அவளிடம் எப்படி நெருங்கு கிறது? அவளோடு கூடவே ஒரு கிழவி இருக்கிறாளாம்; யார் வந்தாலும் அவள் வேட்டை நாய் போல மேலே விழுந்து கடித்து அனுப்பி விடுகிறாளாம்; தபால் மூலமாக கடிதம் அனுப்பினால், அதை உடைக்காமலே நெருப்பில் போட்டு விடுகிறாளாம். நமக்கு முன் தப்பிலி சமஸ்தானத்து மகாராஜா எவ்வளவோ பாடுபட்டு அவமானம் அடைந்து விட்டார். எருமைநாதபுரம் மகாராஜா ஆயிரம் ரூபாய் நோட்டை கடிதத்தில் வைத்து அனுப்பினாராம். அந்த நோட்டையும் நெருப்பில் போட்டுக் கரியாக்கி விட்டாளாமே. அப்படிப்பட்ட பகட்டுக்காரியிடத்தில் நாம் எப்படி நெருங்குகிறது.

*மைனர்:-* (சிறிது ஆழ்ந்து யோசனை செய்து) முதலில் அவளுடைய இடத்தைக் கண்டுபிடிப்போம். அதன் பிறகு எப்படி யாவது தந்திரம் செய்து, அவள் வீட்டில் உள்ள வேலைக்காரி, சமையற்காரி முதலிய எவளையாகிலும் பிடித்து, அவர்களுக்குச் சரியானபடி பணம் இளக்கினால், அவர்கள் தங்களுடைய எஜமானியை நம் வலையில் எப்படி வீழ்த்துகிறது என்பதற்கு ஏதாவது வழி காட்டுவார்கள். அதன்படி நாம் செய்வோம்; இன்றைக்கு பொன்னம்பலம் தவறாமல் இடத்தை மாத்திரம் கண்டு பிடித்து விட்டால், நான் பிச்சைக்காரனைப் போலாவது, அல்லது, ஏதாவது பழம், புஷ்பம் முதலிய பொட்டைச்சி சாமான் விற்பவன் போலவாகிலும் வேஷம் போட்டுக் கொண்டு, அவள் இருக்கும் இடத்துக்குள் நுழைந்து துப்பு அறிந்து வருகிறேன். அதன் மேல் நாம் யோசனை செய்து காரியத்தை முடிப்போம் – என்றான்.

அதைக் கேட்ட துரைராஜா மகிழ்ச்சி அடைந்தவனாய், "பலே! மாப்பிள்ளைக்குத் தெரியாத யோசனைக்கு நான் என்ன சொல்லப் போகிறேன். அப்படியே செய்வோம்" என்று கூறிய வண்ணம் தவசிப்பிள்ளை பொன்னம்பலத்தை அழைத்து, அன்றிரவில் அவன் செய்ய வேண்டிய காரியத்தை அவனுக்குத் தெரிவித்து,

அதற்குத் தேவையான தந்திர யுக்திகளை எல்லாம் சொல்லிக் கொடுத்து, அவனை அனுப்ப, அதன் பிறகு இருவரும் எழுந்தனர். அன்று மாலை ஏழுமணி முதல் ஒன்பதரை மணி வரையில் குலேபக்காவலி என்னும் நாடகம் வி.பி. ஹாலில் நடத்தப்படும் என்ற விளம்பரம் வெளியிடப்பட்டிருந்தது ஆகையால், செட்டியாரிடம் போய் கடன் விஷயத்தை முடித்துக் கொண்டு நேராக அப்படியே வி.பி. ஹாலுக்கு தாங்களும் முன்னதாகவே போய்விட வேண்டும் என்னும் எண்ணத்தோடு அவர்கள் இருவரும் பங்களாவைவிட்டு வெளிக் கிளம்பினர்.

★ ★ ★

2–ம் அதிகாரம்

## குலேபக்காவலி – மோகனாங்கி

**அ**ன்று மாலை 6 மணி சமயமாயிற்று; நாடகம் நடத்தப்படும் வி.பி. ஹாலில் ஜனங்கள் அபரிமிதமாகக் கூடியிருந்தனர். அதன் கூடம் முழுதும் கூக்குரலும் குதூகலமுமே காணப்பட்டன. மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை என்னும் மூன்று பெரும் பேய்கள் முற்றிலும் வெறிகொண்டு, கோபம், மோகம், லோபம், மதம், சண்டை, பொறாமை, நட்பு, துயரம், தரித்திரம் முதலிய பலவகைப்பட்ட துர்க்குணங்களான பிள்ளை குட்டி களோடு நிருத்தனம் செய்யும் நாடக மேடையாகிய வெளியுலகத் துக்கு முற்றிலும் மாறாக, அந்த நாடகக் கும்பலாகிய சிறிய உலகம் சந்தோஷமே நிறைந்ததாகத் தோன்றியது. மிகவும் விசாலமாக இருந்த அந்தக் கூட்டத்தில் எங்கும் விண்மணிகளைப் போல சரம் சரமாகத் தொங்கிய மின்சார விளக்குகளின் ஜோதி கோடி சூரியப் பிரகாசமாக ஜ்வலித்தது. சப்த வர்ணங்களை உடைய காகிதங் களால், அழகழகாகச் சித்தரிக்கப்பட்ட தோரணங்களும் பூக்களும் வானவிற்களின் அணிவகுப்போடு தேவேந்திர சபையோ, அல்லது கந்தருவ உலகத்தில் மன்மதனும் ரதியும் கொலுவிருக்க அமைக்கப்பட்ட அற்புத அலங்காரமோ எனத் தோன்றி, காண்போர் கண்களையும் மனத்தையும் கவர்ந்தன. ஆயிரக் கணக்கில் வரிசை வரிசையாகப் பரப்பப்பட்டிருந்த வழுவழுப்

பான கருங்காலி நாற்காலிகளில் எங்கு பார்த்தாலும் வைரக் கடுக்கன்களும் வைரக் கம்மல்களும், ஜரிகைகளும், பட்டாடைகளுமே மயமாகத் தோன்றின. பெருமையால் நிமிர்ந்த ராவ்பகதூர்களும் திவான் பகதூர்களும், செல்வத்தால் செருக்கிய செட்டிமார்களும், வாய்மையால் வலுத்த வக்கீல்மார்களும், அலங்காரப் பிரியர்களும், டாம்பீகர்களான கோலாகலப் புருஷர்களும், மனமோகன சுந்தர ரூபங்களைப்பெற்ற யௌவனப் பெண்டீரும், புருஷரும், சிரித்த முகமும் இனித்த சொற்களுமாகக் காணப்பட்டு இன்பமயமாக இருந்தனர். ஆனால் வெளிமயக்கான அந்தப் பிரகாசத்திற்குள் நுழைந்து அவர்களது அந்தரங்கமான மனோ நிலைமையை ஆராயப் புகுந்தால், அங்கு உண்மையான ஆனந்தமும், திருப்தியும், சாந்தமான அமைதியும் இருக்கக் காண்பது மாத்திரம் சந்தேகம். தாங்கள் உண்மையில் பரம ஏழ்மை நிலைமையில் இருக்கிறோம் என்பதை மறைத்து, தாங்கள் பெரிய முதலாளிகள் என்னும் எண்ணத்தைப் பிறர் மனதில் உண்டாக்கும் பொருட்டு ஜரிகை வேஷ்டிகளும் பட்டுச்சட்டைகளும் பெருத்த தலைப்பாகைகளும் அணிந்திருந்தவர் பல்லோர். மகா கொடிய பொறாமைகளையும் கவலைகளையும் கொண்ட தங்களது மனதை வெளியில் காட்டாமல் மறைப்பதன் பொருட்டு புன்னகை செய்தோர் பலர். ஜாதி ரோஜா மல்லிகை முதலிய புஷ்பங்களும் வைர ஆபரணங்களும் நிறைந்த சிரங்களுக்குள் பித்தமும் பேதைமையும் துர்க்குணங்களும் வெறியும் அஞ்ஞான இருளும் நிறைந்திருக்கப் பெற்றவர் அநந்தம். வேறு பலரிடத்தில் விலை மதிப்பற்ற பதக்கங்களும், முத்து மாலைகளும், வைர சரங்களும் அழகு செய்த மார்புகளுக்குள் துராசைகளும் பலவகைப்பட்ட மோக விகாரங்களும் கொந்தளித்துக் கொண்டிருந்தன. புது நாகரிகம் கற்ற பலர் தங்களது முகங்களில் வெண்மையான மாவைப் பூசி நாடக வேஷங்கள் போல மினுக்கி, காண்போர் கண்களுக்கு விருந்தாக அமைந்திருந்தனர்; ஆகவே, அந்த அழகிய மாளிகையில் இரண்டு வகையான நாடகங்கள் நடிக்கப்பட்டன. மேடை மீதிருந்த நாடகக்காரர்கள் குலேபக்காவலியும், கூடத்தில் இருந்த ஜனங்கள் பிரபஞ்ச லீலா விநோதமும் நடத்திக் கொண்டிருந்தனர்.

முதல் வரிசையில் இருந்த சோபாக்களில் தேனாம்பேட்டை வாசிகளான சமஸ்தானாதிபதிகளும், மகா பிரபுக்களும் நிறைந்து கம்பீரமாக உட்கார்ந்திருந்தனர்; அவர்களின் இடையில் நமது நமது துரைராஜாவும் மாரமங்கலம் மைனர் துரையும் இருந்தனர் என்று சொல்வது மிகையாகும். ஏனென்றால் அச்சில்லாமல் தேர் ஓடாதல்லவா? அவர்கள் இல்லாவிட்டால் அங்கே வந்திருந் தோருக்கு மகாஜனங்கள் என்ற பெயர் எப்படிப் பொருந்தும்? ஆகையால், அவர் மற்றவர் வருவதற்கு ஒரு நாழிகைக்கு முன்னமே வந்துவிட்டனர். உட்புறத்தில் நிற்கவும் இடமில்லை என்பது தெரிந்தும், நாடகக்காரர்கள் மேன்மேலும் பணத்தைப் பிடுங்கிக் கொண்டு ஜனங்களை உள்ளே தள்ளித்தள்ளி அடைத்துக் கொண்டே இருந்தமையால், எலி நுழைய இடம் போதாத இண்டு இடுக்கு மூலை முடுக்குகளில் எல்லாம் ஜனங்கள் ஒடுங்கிக் கொண்டு, மோகனாங்கியை மாத்திரம் பார்த்தால் அது போதும் என்று ஓணானைப் போல தலைகளை நீட்டிக் கொண்டிருந்தனர். சிலருக்குக் கால்கள் நசுங்கித் துகையலாயின; சில பெண்டீரின் கம்மல் தொங்கிய காதுகள் அறுந்து போயின. சிறிது தாமதமாக வந்த வக்கீல்களான மூன்று கிழவர்களது சிரத்தில் எலிவாலைப் போலத் தொங்கிய குடுமிகள் போன இடம் தெரியவில்லை. அவர்கள் மோகனாங்கியை மறந்து தங்கள் குடுமிக் களவு இந்தியன் பினல் கோடின் எந்தப் பிரிவில் சேர்ந்தது என்பதைப் பற்றி யோசிக்கிறார்கள். புதிதாக முறுக்கேற்றி தும்பை மலர் போல சலவை செய்யப்பட்ட மஸ்லின் சட்டைகள் சக்கை சக்கையாகக் கிழிந்து கோபித்துக் கொண்டு பல இடங்களுக்கும் போயின. ஜரிகைத் தலைப்பாகைகளும், ஷோக் அங்கவஸ்திரங்களும் கீழே விழுந்து காலால் துகையுண்டன. சிகரெட்டுப் புகையின் பரிமள கந்தமும், மூச்சுக்காற்றின் கொதிப்பும், நெருக்கத்தினால் உண்டான வியர்வைச் சேறும் ஒன்றுகூடி, அது சுவர்க்க போகமோ அல்லது நரக வேதனையோ என்ற சந்தேகத்தை உண்டாக்கிக் கொண்டிருந்தன.

இத்தகைய லீலா விநோதங்களுக்கு இடையில் குலேபக்காவலி நாடகம் ஆரம்பமாயிற்று. மோகனாஸ்திரம் பாய்வது போல மனதைக் கவரக்கூடிய இனிமையான பாடல்களோடும்

சாகசங்களோடும் ஒவ்வொரு பெண்மணியும் தோன்றி தனது திறமையைக் காட்ட ஆரம்பித்தாள். கடைசியாக, தாசி வேஷம் தரித்துத் தோன்றிய மோகனாங்கியைக் கண்டவுடனே ஜனங்கள் அடக்க முடியாத ஆவேசமும், வெறியும், கரைகடந்த குதூகலமும், பெருமகிழ்ச்சியும் கொண்டு தங்களை மறந்து, கைகொட்டி ஆர்ப்பரித்தனர். அவள் வரும்போதே யாவரும் கண்டு திகைக்கும் படி பார்சீ நடனமாடிய வண்ணம் ஓர் இந்துஸ்தானிப் பாட்டை எடுத்து ஜிலுஜிலென்று பன்னீர் தெளிப்பது போல மகா ஜனங்களின் செவிகளில் தூவிக் கொண்டு விண்ணுலகினின்று தெய்வ கன்னிகை இறகுகளோடு வந்து இறங்குவது போ

*"கற்றைவிரி பொற்கடை மயிர்த்துறு கலாபம்*
*சுற்றுமணி புக்கவிழை மிக்கிடை துவன்றி*
*ற்றவழ வாணிமிர மெய்யணிகள் மின்னச்*
*சிற்றிடை நுடங்கவொளிர் சீரடி பெயர்த்து"*

மேடையின் மீது காட்சி கொடுத்தாள். ஆகா! அவளது அற்புத வடிவத்தை என்னவென்று சொல்வது! ஒப்புயர்வில்லாத அற்புத வனப்போடும் தோன்றிய அந்த அணங்கின் அழகை வருணிக்க தெய்வ பாஷையான வடமொழியிலும் தக்க சொற்களும் இல்லை என்றே கூற வேண்டும். அதுகாறும் கூக்குரல் செய்து கொண்டிருந்த மகாஜனங்கள் யாவதும் உயிரற்ற பதுமைகள் போல பேச்சு மூச்சின்றி வாயைப் பிளந்து கொண்டு அப்படியப் படியே திகைத்து, அவள் மீது சென்ற தங்களது நாட்டத்தையும் மனத்தையும் தங்களது வசம் திருப்பச் சிறிதும் வல்லமை அற்றவராய் பிரமிப்படைந்து தேனில் வீழ்ந்த ஈக்கள் போல இன்ப வெள்ளத்தில் கிடந்து தத்தளித்தனர்; எள் விழும் சப்தமும் நன்றாகக் கேட்கத் தக்கபடி நிச்சப்தம் குடி கொண்டிருந்தது.

அந்தப் பெண்பாவையின் வயது பதினெட்டுக்கு மேல் இராது பதினான்கு லோகங்களிலும் உள்ள அழகிற் சிறந்த யௌவன மடந்தையரின் லட்சணங்களை எல்லாம் அள்ளி ஒன்று சேர்த்துக் கடைந்தெடுத்த அமிர்த சாரமே அந்த வடிவமாக அமைந்து தோன்றி மனதைக் கொள்ளைக் கொண்டதோ என விளங்கி,

*"பொன்னொழுகு பூவிலுறை பூவையெழில் பூவைப்*
*பின்னெழில்கொள் வாள்இணை பிறந்தொளிர் முகத்தாள்*
*கன்னியெழில் கொண்டது கலைத்தட மணித்தேர்*
*மின்இழிவ தன்மையிது விண்இழிவ தென்ன,*
*கானின் உயர் கற்பகம் உயிர்த்த கதிர்வல்லி*
*மேனிநனி பெற்றுவிலை காமநெறி வாசம்*
*தேனின்மொழி யுற்றினிய செவ்விநனி பெற்றோர்*
*மானின்விழி பெற்றுமயில் வந்ததென வந்தாள்"*

ஆன, அத்தகைய அற்புத ஜோதி நிறைந்த பெண் வடிவத்தை இவ்வுலகில் கண்படைத்தவன் எவனும் கண்டிரானென்பது திண்ணம். சிருஷ்டி காலந்தொட்டு எத்தனையோ கோடி ரதி தேவி களைப் படைத்த பிரம்மதேவனுக்கே மோகனாங்கியின் அழகு அதுகாறும் காணாத புதுமையாக இருந்ததென்றால், மற்றவருக்கு அது எங்ஙனம் இருந்திருக்கும் என்பது கூறாமலே விளங்கும். அங்கே கூடியிருந்தோர்களது மனதில் அதற்கு முன் வதைத்திருந்த கவலைகளும் துன்பங்களும் துயரங்களும் சஞ்சலங்களும் தெய்வாம்சம் பொருந்தியிருந்த அந்த மின்னற்கொடியின் தோற்றத்தால் மறைந்து, சூரியன் முன் இருள்போல ஓடி ஒளிந்தன. கானகத்தில் உள்ள மான்கன்றுகள் பூமியில் கால்கள் வைப்பது தெரியாமல் எவ்வாறு துள்ளிக் குதிக்குமோ, அவ்வாறு அவள் நடனம் செய்த போது அவளது அற்புத மேனி நெட்டியால் ஆனதோ, பஞ்சினாலானதோ, காற்றினாலானதோ, அல்லது அவை யாவற்றிலும், இலேசான சொர்பனத்தினால் ஆனதோ என்று ஐயுறும்படி மண்ணிலும் இன்றி விண்ணிலும் இன்றி பம்பரம் போலச் சுழன்றது. அவளது மன வேகத்துக்குச் சமமாகத் தொடர்ந்து சென்று வளைந்து கொடுத்த அவளது தேகம் நடுத்தர உயரமும், அழகிய பருமனும், அதனிடத்தில் அதிகம் குறைவு என்பதின்றி உன்னதமாக உயர்ந்து சரிந்த தசை பிடிப்பும், கவிந்த கன்னங்கள், வளைந்த கழுத்து, பரந்த மார்பு, துவண்ட இடை, கடைந்தெடுத்த கை கால்கள் முதலிய எல்லா அங்கங்களும் சாமுத்திரிகா லட்சணத்திற்கு ஓர் இம்மியளவும் பிசகாமல், பார்க்கப் பதினாயிரங் கண்கள் வேண்டிய அபார சிருஷ்டியாக இருந்தன. அவளது சரீரத்தின் மேற்புறம் சருமத்தால் ஆனதோ, மெருகு

கொடுத்த தங்கத்தகடாயினும் தந்தத்தகடாயினும் கொண்டு பொருத்தப்பட்டதோ என கண்ணாடி போல வழுவழுப்பும் பளபளப்பும் அமைந்து, காண்போர் முகம் அதில் பிரதிபிம்பித்தது. பூரண சந்திரோதயமோ, தலை அவிழ்ந்து மலர்ந்து நகைத்த செந்தாமரை மலரோ, இனிமையையும், குளிர்ச்சியையும் அள்ளி வீசிய அமிர்த கலசமோ எனத் தோன்றிய அவளது சுந்தர வதனம்,

*"கொண்டலின் குழவி யாம்பல் குனிசிலை வள்ளை கொற்றக்*
*கெண்டைஒள் தரள மென்றிக் கேண்மையை கிடந்த திங்கள்*
*மண்டில வதன மென்று வைத்தனன் விதியே நீயப்*
*புண்டரீ கத்தை யுற்ற பொழுதது பொருந்தித் தேர்வாய்"*

என்று வருணிக்கத் தக்கதாய், ரதிதேவி தனது மோகனாஸ்திர பரிவாரங்களோடு கொலு வீற்றிருந்த வசீகர சபாமண்டபம் போல, வருணிக்க இயலாத வாமக் களஞ்சியமாய், அவளது தேகமானது பதினான்கு லோகங்களுக்கும் மேலே நின்ற சுவர்க்க லோகமாய் காணப்பட்டது.

சீதளாகரமான அத்தகைய வனத்தின் வசீகரத் தன்மையைப் பதினாயிரம் மடங்கு சிறப்பித்துக் காட்டிய அவளது சிரத்தின் அளக பாரமோ சொல்லிலடங்கா எழில் வாய்ந்ததாய்,

*"காரினைக் கழித்துக் கட்டிக் கள்ளினோ டாவி காட்டிப்*
*பேரிருட் பிழம்பு தோய்ந்து நெறிவுறிப் பிறங்கு கற்றைச்*
*சோர்குழல் தொகுதிச் சூழல் சும்மைசெய் தனைய தம்மா*
*நேர்மையைப் பருமை செய்த நிறைநறுங் கூந்தல் நீத்தம்"*

என்ற லட்சணப்படி அமைந்திருந்தது. இத்தனை வைபவங்களுக் கிடையில் நின்ற அவளது கண்ணிணைகள் ஒரு நொடியில் மனிதரைக் கொல்லும் விஷமாகவும், அதே நொடியில் தமது மலர்ச்சியால் உயிர் கொடுக்கும் அமிர்த சஞ்சீவியாகவும் அமைந்து முகத்தைக் காட்டிலும் விசாலமாய் காதளவு ஓடி நின்று,

*"பெரியவாய்ப் பாவை யொவ்வா பிறிதொன்று நினைந்து பேச*
*அரியவாய் ஒருவ ருள்ளத் தடங்குவ வல்ல வுண்மை*
*தெரிய ஆயிரக்கால் நோக்கில் தேவர்க்கும் தெய்வ மென்னக்*
*கரியவாய் வெளிய வாகும் வாள்தடம் கண்கள் அம்மா"*

என்று யாவரும் வியக்கும் வண்ணம் அமைந்து,

